


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 58 திருவள்ளுவர் ஆண்டு 2056, கும்பம், மார்ச்சு – 2025







# தோல் தொழில்நுட்பவியல் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Green hide | – பதனிடாத் தோல் |
| Awl | – தோல் துளைப்பான் |
| Bag leather | – பைத் தோல் |
| Bag tanning | – பைத்தோல் பதனிடல் |
| Bating | – தோல் பதனிடல் |
| Belting leather | – வார்ப்பட்டைத் தோல் |
| Calf leather | – கன்றுக்குட்டித் தோல் |
| Case hide | – பெட்டிக்கான கெட்டித்தோல் |
| Chain stitch | – தொடரித் தையல் |
| Clicking boards | – தோல் பலகை |
| Clicking machine | – தோல் அறுவைப்பொறி |
| Corns | – கால் ஆணி |
| Fancy leather | – அழகுத் தோற்பொருள் |
| Kids glove | – சிறுவர் கையுறை |
| Purification | – அழுக்ககற்றல் |
| Lace leather | – அணி தோல் |
| Leather gauge | - தோல் தடிப்பமளவி |
| Lizard skin | – உடும்புத் தோல் |
| Patent leather | – மெருகுத் தோல் |
| Reptile skins | – ஊர்வனத் தோல் |
| Seamless shoe | – தையலற்ற மூடணி |
| Sheep skin | – செம்மறித் தோல் |
| Crease iron | – கோடு அழுத்தி |
| Tick mark | – சரிக்குறி |
| Water proofing | – நீர்க் காப்பு |

சொற்குவை (sorkuvai.tn.gov.in) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, கும்பம் (மாசி)
மார்ச்சு – 2025

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

## பழந்தமிழரின் கணக்கீட்டு நுட்பம்!

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" என்பது ஔவையின் அமுதமொழி. பழந்தமிழர்களின் எண்ணியல் அறிவும் கணக்கீட்டு நுட்பமும் வியக்கத்தக்க வகையில் அமைந்திருந்ததை இலக்கியங்கள்வழி நாம் உணரமுடிகிறது. அந்தவகையில், பழந்தமிழரின் அளவைப் பெயர்களை இளந்தலைமுறைக்கு நினைவூட்டும் வண்ணம் தமிழன்பர் ஒருவர் கட்செவியில் எழுதிய செய்தியொன்றை இங்கே குறிக்கின்றேன். பின்வரும் காளமேகப் புலவரின் தனிப்பாடலின் மூலம், பின்னங்களையும் பெரும் வாழ்வியல் நெறியையும் சேர்த்தே நாம் அறிந்துகொள்ள முடியும்.

" முக்காலுக்கு ஏகாமுன் முன்நரையில் வீழாமுன்
அக்காலரைக் கால்கண்டு அஞ்சாமுன் – விக்கி
இருமாமுன் மாகாணிக்கு ஏகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரைஇன்று ஓது. " (காளமேகப் புலவர் பாடல்கள் – 71)

முதுமையின் காரணமாக இரண்டு கால்களும் வலுவிழந்து மூன்றாவது கோலை (ஊன்றுகோல்) ஊன்றி நடப்பதற்கு முன்னர் (முக்காலுக்கு ஏகாமுன்) , தலைமுடியின் முன்புறம் நரை தோன்றுவதற்கு முன்னர் ( முன் நரையில் வீழாமுன்), அந்தக் காலனைக் கண்டு அஞ்சி நடுங்குவதற்கு முன்னர் (அக்காலரைக் கால்கண்டு அஞ்சாமுன்), விக்கல் எடுத்து இருமி உயிர் போகும் முன்னர் (விக்கி இருமாமுன்) , உயிரற்ற நம் உடல் சுடுகாட்டுக்குப் போகும் முன்னர் ( மாகாணிக்கு ஏகாமுன்) , காஞ்சிபுரத்தில் ஒரு மாமரத்தின் கீழே இருப்பவரை (கச்சி ஒரு மாவின் கீழரை) , இன்றே நீ வணங்குவாயாக (இன்று ஓது) என்கிறார் காளமேகப் புலவர். அதாவது , " நீ எண்ணியது எதுவோ அதை வாய்ப்பு உள்ளபோதே செய்து முடித்துவிடு" என்கிறார். பழந்தமிழர் பயன்படுத்திய அளவைப் பெயர்களைப் பின்னங்களாக்கி அதை ஒன்றை விட ஒன்று சிறியதாக இருக்கும்படி ( இறங்கு வரிசையில்) வரிசைப்படுத்தியிருக்கிறார்.

| | |
|---|---|
| முக்கால் | = 3/4 |
| அரை | = 1/2 |
| கால் | = 1/4 |
| அரைக்கால் | = 1/ 8 |
| இருமா | = 1 / 10 |
| மாகாணி | = 1 / 16 |
| ஒருமா | = 1 / 20 |
| கீழரை | = 1 / 640 |

ஆகிய பின்னங்களின் மூலமாக வாழ்வியல் நெறியை பிணைத்துப் பாடியிருப்பது அருமையிலும் அருமை. அருந்தமிழில் நிறைந்துள்ள இதுபோன்ற அரிய செய்திகளை இளையதலைமுறைக்கு எடுத்துரைத்து மொழிநலம் காப்போம்.

தமிழைச் சொல்வோம்! தமிழால் வெல்வோம்!

# பாவாணரின் மொழிப் பகுப்பு



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதுபெற்றவர்

## மூன்று வகை

அடிப்படை எண்கள், உறவுமுறை, வீட்டுவிலங்குகள், அன்றாட வாழ்வின் செயற்பாடுகள் ஆகியவற்றைக் குறிக்கும் அடிப்படைச் சொற்களிலும் ஒலியமைப்பு, ஆக்க ஈறுகள், கூட்டுச்சொல் அமைப்பு, தொடர் அமைப்பு ஆகியவற்றிலும் இலக்கண அமைப்பிலும் ஒற்றுமை காணப்படுவதைக் கொண்டு மொழிகளை உறவுடைய மொழிகள் என அறிஞர் வகைப்படுத்துகின்றனர்; உறவுடைய மொழிகளைக் குழுக்களாக வகைப்படுத்துவதற்கு மொழிக் குடும்பம் (language family), குடும்ப மரக்கிளை (laqnguage family tree), அலை அமைப்பு (wave model) ஆகிய மூன்று வகைகளைப் பின்பற்றுகின்றனர்.

## மொழிக் குடும்பம்

மொழிக் குடும்பம் என்றழைக்கப்படும் ஒரு குழுவுக்குள் அடங்கும் மொழிகள் எல்லாம் உடன் பிறப்பு மொழிகள் (sister language) என்றழைக்கப்படுகின்றன. வரலாற்று மொழியியலில், ஒரு பொதுவான மூதாதையர் மொழியிலிருந்து உருவான மொழிகளை உடன் பிறப்பு மொழிகள் என்று குறிப்பிடுகின்றனர். அதாவது, ஒரு மொழிக் குடும்பத்தில் உள்ள ஒவ்வொரு மொழியும் அக்குடும்பத்து மற்ற மொழிகளைப் போலவே ஒரே மூல மொழியிலிருந்து வந்தவை, ஆக ஒரு குடும்பத்து ஒரு மொழிக்கு அக்குடும்பத்து மற்ற மொழிகள் உடன்பிறப்புகள். சில மொழிகளைப் பெற்றோர் மொழிகள் (parent language) என்று கொள்வதும் உண்டு. பிற்கால மொழிக்கு வழிவகுத்த முந்தைய மொழி பெற்றோர் மொழி யாகும். சான்றாக இலத்தீனம் பிரெஞ்சு, இத்தாலி மொழிகளின் பெற்றோர் மொழியாகும் ஒரு குடும்பத்து மொழிகள் எல்லாம் ஒரே காலத்தில் தனித்தனி மொழிகளாகத் தனித் தன்மை எய்தியனவல்ல.

குடும்பத்துமொழிகள் அனைத்திலும் ஒரே வகையான மாற்றங்கள் நிகழும் என்று சொல்லவியலாது. உடன்பிறப்பு மொழிகள் என்று குறிப்பிடும்பொழுது குடும்பத்தில் உள்ள மொழிகள் அனைத்தையும் ஒரேவகையாகக் கருதும் நிலை ஏற்படுகிறது. ஆனால் குடும்ப மொழிகளின் காலப் பழைமை, சொல்வளம் போன்றன வெவ்வேறானவையாக இருக்கும். தமிழிய (திராவிட) மொழிக் குடும்பத்துள் தமிழ்மொழி தனித்தன்மை வாய்ந்தது. இதைக் குறிக்கும் முகத்தான் தமிழைத் திராவிடத்திற்குத் தாய் என்று குறிப்பிட்டார் பாவாணர்.

பழைமையான ஒரு மொழியைக் குடும்பமொழியிலிருந்து தனியாக வைத்துப் பார்ப்பது இந்திய – ஐரோப்பிய மொழிக் குடும்பத்திலும் இருக்கிறது. அங்கு உரோமன் மொழிகள் அனைத்தும் இலத்தீனம் மொழியிலிருந்து பிறந்தன என்று குறிப்பிடு கின்றனர். பிறகு இலத்தீனமும் உரோமன்சு மொழிகளும் சேர்ந்தது இந்திய ஐரோப்பிய மொழிக் குடும்பம் என்றழைக்கின்றனர். இந்திய ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில் இலத்தீனம் பழைமையான மொழி; வளமையான மொழி. அது கற்றோர் மொழியாகவும் செவ்வியல் மொழியாகவும் இருந்துள்ளது. அதன் இலக்கண அமைப்பு பிறமொழிகளுக்கும் பொருந்தும் எனக் கருதப்பட்டு வந்துள்ளது. இக்கரணியங் களினால் இந்திய ஐரோப்பிய மொழிக்குடும்பத்தின் முந்து தன்மையினை மிகுதியாகக் கொண்டது இலத்தீனம் என்று குறிப்பிடுகின்றனர்.

இதே வகையில்தான் தமிழிய மொழிக் குடும்பத்தில் தமிழைத் தமிழல்லாத பிற

திராவிட மொழிகளிலிருந்து தனியாக வைத்துள்ளார் பாவாணர். பின் தமிழும் திராவிட மொழிகளும் சேர்ந்தது தமிழியக் குடும்பம் என்றார் அவர். இலத்தீனம் மொழிக்கு இல்லாத சிறப்புகள் பலவற்றைக் கொண்டது தமிழ், இலத்தீனம் மொழியில் பண்படுத்தப்பட்ட கூறுகள் மிகுதியாக இருக்கின்றன. சன்றாகக் காதலித்தல் என்னும் வினையைக் குறிக்கும் amo என்னும் இலத்தீனச் சொல் காலம், வினைப் பொருண்மை (mood), வினைவகை (voice) ஆகியவற்றைக் காட்டும் வகையில் 120 வகைகளில் புடைபெயர்கின்றன.

amo – நான் காதலிக்கிறேன்.

amas – நீ காதலிக்கிறாய்

amat – அவன் காதலிக்கிறான்

amamus – நாம் காதலிக்கிறோம்

amatis – நீங்கள் காதலிக்கிறீர்கள்

amant – அவர்கள் காதலிக்கிறார்கள்

என்பன போன்று அச்சொல் புடைபெயர்கிறது.

இதுபோன்ற கரணியங்களினால் அது பேச்சு மொழியாக நீடிக்கும் தகுதியை இழந்துள்ளது. ஆனால் தமிழில் அவ்வாறு இல்லை. காலத்தால் பழைமையாக இருப்பதுடன் இன்றளவும் பேச்சு மொழியாக இருக்கும் தகுதியினைத் தமிழ் கொண்டுள்ளது. தமிழிலுள்ள வளர்ச்சிகள் அனைத்தும் இயல்பான வளர்ச்சியாகும். அதனால்தான் இதை இயன்மொழி என்று குறிப்பிட்டார் பாவாணர்.

### முந்து மொழி

இந்திய – ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் முந்து மொழித் தன்மைகள் இலத்தீனத்தில் மிகுதியாக இருப்பன போன்று தமிழிய மொழிக்குடும்பத்தின் முந்து மொழித் தன்மைகள் தமிழில் மிகுதியாக இருக்கின்றன. அங்கு முந்து இந்திய – ஐரோப்பிய மொழி என்று குறிப்பிடுவதைப்போல் பாவாணர் தென்மொழி என்னும் ஒன்றினை முந்து தமிழியக் குடும்பமொழிக்குக் குறிப்பிட்டுள்ளார். அத் தென்மொழி, தமிழும் தமிழல்லாத பிற திராவிட மொழிகளிலுள்ள தமிழிய (திராவிட)க் கூறுகளும் சேர்ந்தது என்று ஒரு வரையறையையும் தந்துள்ளார் (பாவாணர் 1968:1). இங்கு முந்து மொழித் தன்மையை எளிமையாக விளக்கிக் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.

### மொழியியல் வளர்ச்சி

இன்றைய மொழியியல் வளர்ச்சிகளுள் பெரும்பாலானவை இந்திய ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில் ஏற்பட்டனவே. அக்குடும்ப மொழிகள் மிகுதியாக ஆராயப்பட்டுள்ளன. அங்கு ஆராய்ந்து கண்ட முடிபுகளே பிற மொழிகளுக்குப் பொருத்திக் காட்டும் நிலை நடைமுறையில் இருந்து வருகிறது. அவ்வகையில் அங்கு வகைப்படுத்திக் காட்டிய முறையைத் தமிழிய மொழிக் குடும்பத்திற்கும் பொருத்திக் காட்டுவது சரியானதாக இருக்கும்.

மொழிக்குடும்ப வகைப்பாட்டின் மூலம் மொழிகளின் தன்மைகள், ஒப்புமைக் கூறுகள் ஆகியன தெளிவு பெறுகின்றன. குடும்பத்து உறுப்பினர்க்கு அகவை கூடிக்கொண்டே போவதுபோல் குடும்ப மொழிகளின் அகவையும் கூடிக்கொண்டே செல்லும். ஆனால் குடும்ப உறுப்பினர்க்கு இறப்பு வருவது போல் மொழிக்கு இறப்பு நேராது. குடும்ப மொழிகள் பிரிந்து தனித்தனியாக வளர்ச்சி பெற்று வந்தாலும் அவற்றிற்கிடையே இடையுறவுத்தன்மை ஏற்படுவதற்கு வாய்ப்புகள் உண்டு. இதுபோன்ற தன்மைகளை விளக்குவதற்கு மொழிக் குடும்ப வகைப்பாட்டில் வாய்ப்புக் குறைவு.

### குடும்ப மரக்கிளை

மொழிகளைக் குடும்பமாகக் கொள்வதில் உள்ள குறைபாடுகளைக் களைய குடும்ப மரக்கிளை என்னும் வகைப்பாட்டினை மொழியியலாளர்கள் உருவாக்கி யுள்ளனர். இவ் வகையில்

முந்து மொழியிலிருந்து வெவ்வேறு காலங்களில் பிரிந்த மொழிகளை நன்கு விளக்க இயலும். உறவுடைய மொழிகளின் உட்பிரிவு குழுவிற்குள் காணப்படும் உறவுமுறைகளை மரக்கிளையுடன் ஒப்புமைப் படுத்துவர். இந்திய ஐரோப்பிய மொழிகளுக்குக் குடும்ப மரத்தை அறிமுகப்படுத்தியவர் தார்வினின் திரிபாக்கக் கொள்கையால் ஈர்க்கப்பட்ட ஆகத்து சிலேச்சர் (August Schleicher) என்பவராவார். இப்பகுப்பு குடும்பமொழிப் பகுப்பினைக் காட்டிலும் உறவுடைய மொழிகளை விளக்குவதற்குச் சிறந்தது. இப்பகுப்பில் மூலக்கிளையிலிருந்து பிரியும் சிறு கிளைகள், சிறு கிளைகளிலிருந்து தோன்றும் குறுங் கிளைகள் என்று அனைத்தையும் விளக்க இயலும், மொழிகளின் காலம், இடம், அவற்றின் பின்னணியில் அமையும் உறவு முறை ஆகியவற்றை இப்பகுப்பில் நன்கு விளக்கலாம்.

"தமிழர் குமரிக்கண்டத்தில் தோன்றி, கடல் கோள், இனப்பெருக்கம், நாடுகாண் விருப்பம் முதலிய பல்வேறு கரணியங்களால் வடக்கே சென்றனர். அவருட் பலர் பனிமலை (இமயம்) வரை சென்று திராவிடராயினர்.

வடநாட்டுத் திராவிடருள் ஒரு சாரார், வட மேற்கே எத்தியோப்பியா, எகிப்து, செப்பறைத் (Cyprus) தீவு, கிரேத்தாக் (Crete) தீவு, கிரேக்கம், இத்தாலி முதலிய நாடுகள் வழியாய்க் காண்டினேவியம் வரை சென்று ஆரியராக மாறினர். அவருள் ஒரு வகுப்பாரே வேத ஆரியராகச் சின்ன ஆசியா, பாரசீகம் முதலிய நாடுகள் வழியாய் இந்தியாவிற்குள் (கி. மு.2000– 1000 இல்) புகுந்தனர். அந்நிலையில், பழைய வடதிராவிடம், பைசாசம், சூரசேனம், மாகதம் என்னும் மூவேறு பிராகிருதங்களாகத் திரிந்தது. விந்திய மலைக்குத் தெற்கிலுள்ள மொழிகளெல்லாம் செந்தமிழும் கொடுந்தமிழுமா யிருந்ததனால் அவை யாவும் திராவிடம் என்னும் ஒரு பிராகிருதமாகக் கொள்ளப்பட்டன. வேத ஆரியம் வழக்கற்றுப் போனபின் அதனொடு நாற்பிராகிருதங்களையும் சேர்த்தமைத்த அரைச்செயற்கையான இலக்கிய நடைமொழியே (literary dialect) சமற்கிருதம்" (பாவாணர் 1990:26) என்று குறித்துள்ள பாவாணரின் விளக்கம் குடும்ப மரக்கிளை அமைப்பிற்குப் பொருந்துவதாய் இருக்கிறது. மொழி பிரிந்த நிலை, பிரிந்த பின் ஏற்பட்ட வளர்ச்சி, இடையுறவுத் தன்மை ஆகிய அனைத்தும் இதில் காட்டப் பட்டுள்ளன.

மொழிகளை உயிருள்ள குடும்பமாக அல்லது மரக்கிளையாகக் கொள்வதால் சில குறைபாடுகள் இருக்கின்றன. மொழி தனக்கென்று தனியான வாழ்வினைக் கொண்டிருக்கவில்லை. விலங்கைப் போன்றோ மரத்தைப் போன்றோ மொழிக்குத் தனியான வாழ்வு இல்லை. மொழி மரபுகளின் தொகுப்பாகும். மொழியில் ஏற்படும் மாற்றங்கள் அதைப் பேசுவோரால் ஏற்படுவதன்றித் தானாக மொழி மாற்றம் கொள்வது இல்லை. இதனைக் குறிப்பிடும் வகையில் மொழியைப் பேசுவோர் சென்ற தடங்களைக் காட்டி மொழித்திரிபைக் காட்டியுள்ள பாவாணரின் கருத்து கூர்ந்து நோக்கத்தக்கது.

### அலை அமைப்பு

மூன்றாவதாக, அலை அமைப்பு அடிப்படையில் மொழி மாற்றங்களை விளக்கு கின்றனர். நீர்ப்பரப்பின் மேல் ஓரிடத்தில் போடும் திடப்பொருள் வட்டவட்டமாக நீர்த்திரைகளைத் தோற்றுவிப்பதுபோல், மொழிப்பரப்பில் ஓரிடத்தில் ஏற்படும் மாற்றம் சுற்றியுள்ள இடங்களிலும் தாக்கம் விளைவிக்கும். இவ்வகைக் கருத்தை 1872இல் சுமித் (Schmith) என்பவர் வெளியிட்டார்.

தமிழின் தூய்மை தெற்கு நோக்கியது, வடக்கே செல்லச் செல்ல திரிவு கொள்ளும் என்று பாவாணர் கூறுவதும், சமற்கிருதத்தின் ஐந்து நிலைகளாகத் தென்திரவிடம் (வடுகு), வடதிரவிடம் (பிராகிருதம்), கீழையாரியம், வேதமொழி, சமற்கிருதம் என்று அவர் குறிப்பிட்டுள்ளதும் அலை அமைப்பு அடிப்படையில் திரிபைக் காட்டுகின்றன.

மரக்கிளை என்று உருவகப் படுத்தினாலும் அருகருகில் இருக்கும்

மொழிகள் என்று கொண்டாலும் மொழியில் ஒலிமாற்றம் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது. கிளைமொழி அமைப்பை விளக்கும்போது ஒருமொழி பேசும் பெரும் நிலப்பரப்பைப் பல சிறு பகுதிகளாகப் பிரித்து ஆராய்கின்றனர். இதற்குப் பொருந்துவதாகச் செந்தமிழ் கொடுந்தமிழ் விளக்கம் இருக்கிறது.

### செந்தமிழ் கொடுந்தமிழ்

"ஆரியர் வருமுன்பே தமிழிலக்கண நூலார் தமிழைச் செந்தமிழ் கொடுந்தமிழ் என இரண்டாக வகுத்து, பாண்டிநாட்டைத் தன்னுள் கொண்ட செந்தமிழ் நிலத்தில் வழங்கிய சொற்களைச் செந்தமிழ்ச் சொல் என்றும், செந்தமிழ் நிலத்தின் வடக்கும் வடகிழக்கும் மேற்குமாகப் பல்வேறு திசைகளிலுள்ள எல்லைப்புற நாடுகளாகிய கொடுந்தமிழ் நிலங்களில் வழங்கிய சொற்களைத் திசைச்சொல் என்றும் வழங்கினர். பல்திசையில் வழங்கிய சொற்களாதலால் பொதுவாகத் திசைச்சொல் (provincial words) எனப்பட்டன.

திசைச்சொல் என்பன செந்தமிழ் நிலத்து வழங்காது கொடுந்தமிழ் நிலங்களில் மட்டும் வழங்கிய இந்திய சொற்களும் சொல் வழக்குகளுமே.......... முற்காலக் கொடுந்தமிழ்களே பிற்காலத் திராவிட மொழிகள் என்றறிதல் வேண்டும்" (பாவாணர் 1968:2,3) என்று குறிப்பிடுவது இணைவழக்குகளை விளக்குவதாக இருக்கிறது. கிளைமொழிகளே காலப்போக்கில் தனிமொழிகளாக மாறுகின்றன என்ற தன்மையையும் பாவாணர் குறித்துள்ளதைப் பார்க்கிறோம்.

### சொற்கடன்

எளிய உயிரியல் அமைப்பை அல்லது நிலப்பாகுபாடு அமைப்பை வைத்து மொழியின் அமைப்புகள் அனைத்தையும் விளக்கவியலாது. மொழி குமுகாய மரபுத்தொகுதியாக இருப்பதால் சிக்கலானதாக இருக்கிறது. மொழிமாற்றங்களைக் குறிப்பிடும்போது சொற்கடன் பற்றியும் குறிப்பிடுவர். பெரும்பான்மையினர் பேசும் மொழி சிறுபான்மையினர் பேசும் மொழிக்கு அதிகமாகக் கடன் கொடுக்கும். அவ்வகையில் சமற்கிருதத்தில் உள்ளவை எல்லாம் சமற்கிருதம் என்று கொண்டிருந்த நிலைக்கு மாறாகச் சமற்கிருதத்தில் ஐந்திலிருபகுதி தமிழ்ச் சொற்கள் உள்ளதை எடுத்துக் காட்டியவர் பாவாணர். தமிழில் உள்ள வடமொழிச் சொற்கள் பெருமை கருதிக் கொள்ளப்பட்டன என்றும் வடமொழி தமிழினின்று கடன்கொள்ளப்பட்டன. தேவையைக் கருதிக் கொள்ளப்பட்டன என்றும் விளக்கிக் காட்டினார்.

### மூலம்

பல தமிழ்ச் சொற்களுக்கு வட மொழி மூலம் காட்டப்பட்டு வந்துள்ள பொய்ம்மையை வெளிக்காட்டியவர் பாவாணர். சான்றாக, இலக்கணம் என்னும் சொல்லைக் காட்டலாம். எழுத்து, சொல் ஆகியவற்றுடன் பொருளுக்கும் இலக்கணம் கண்டது தமிழ்மரபு. தொல்காப்பியர் காலத்திற்குப் பல நூற்றாண்டுக்கு முன்பே இலக்கணம் தமிழ் வழக்கில் இருந்துள்ளது. இருந்தாலும் இலக்கணம் என்னும் சொல்லுக்கு வடமொழி லக்ஷண என்பதை மூலமாகக் காட்டுவர். சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலியும் இவ்வாறு தான் குறித்துள்ளது. இதில் வேடிக்கை என்னவென்றால், வடமொழியில் லக்ஷண என்னும் சொல்லுக்கு இலக்கணம் என்னும் பொருள் இல்லை. அங்கு இலக்கணத்தை வியாகரணம் என்னும் சொல் குறிக்கிறது. இவ்வாறு இருக்கும்போது இலக்கணத்திற்கு வடமொழி மூலம் எவ்வாறு பொருந்தும்? அதேபோல் இலக்கியத்திற்கு லக்ஷய என்னும் வடமொழி மூலத்தைக் குறிப்பர். வடமொழியில் லக்ஷயவுக்கு இலக்கியம் என்னும் பொருள் இல்லை. அங்கு இலக்கியத்தைக் குறிக்கும் சொல் சாகித்தியம்.

அறிஞர்கள் எமனோவும், பர்ரோவும் தொகுத்த திராவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இலக்கணம், இலக்கியம் ஆகியவற்றைக் குறிக்கும் தமிழ்ச்சொற்கள் இடம்பெற வில்லை. இதைப் பார்ப்பவர் தமிழில் இலக்கியம், இலக்கணம் ஆகியன இல்லை என்னும் முடிவுக்கு வரலாம்.

உலக அளவில் உயர்ந்த செவ்வியல் இலக்கிய மரபைப் பெற்றுள்ள தமிழ் மொழிக்கு, சிறப்பான இலக்கணத்தைப் பெற்றுள்ள மொழிக்கு இந்நிலை வருவதற்குச் சொற்களுக்குத் தவறான மூலம் காட்டியுள்ளதே காரணமாகும்.

### பொருத்தம்

மொழிக் குடும்பம், குடும்பமரக்கிளை, அலை அமைப்பு ஆகிய மொழிப் பகுப்பின் மூன்று வகைகளும் பாவாணரின் மொழிப் பாகுபாட்டுடன் பொருத்திப் பார்ப்பதற்கு இடம் தருகின்றன. கிளைமொழி அமைப்பிலும் மொழிநிலையை விளக்கியுள்ளார்.

மொழிக் கடன் பாவாணர் மொழியாய்வில் மிகுதியான இடத்தைப் பெற்றுள்ளது. மொழிகளை இயன்மொழி, திரிமொழி என்று பகுத்துக் காட்டியது போன்ற அனைத்தும் இக்கால மொழியியல் பகுப்புக்குப் பொருந்துவனவாக இருக்கின்றன.

### குறிப்புதவி நூல்கள்

1.) பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்) 1990, ஒப்பியன்மொழிநூல், கழகம், சென்னை (முதற்பதிப்பு 1940)

2.) பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்) 1968, வண்ணனை மொழிநூலின் வழுவியல், காட்டுப்பாடி

## சொற்பொருளாராய்ச்சி

**சீர்தூக்கல்**

**சீர் = துலைத்தட்டு. தூக்கல் = தூக்கி நிறுத்தல்.**

**சீர்தூக்கல் = சரக்கெடையை நிறுத்தறிந்தாற்போலப் பொருள்களின் இயல்பை எண்ணியறிதல்.**

**அரவணைத்தல்**

**அரவு = பாம்பு. அணைத்தல் = தழுவல். அரவணைத்தல் = பாம்பு பின்னித் தழுவினாற்போல நெருங்கக் கட்டியணைத்தல். அங்ஙனம் அணைத்தாற் போலப் பாதுகாத்தல்.**

**கட்டாயம்**

**கட்டு = செலுத்து. ஆயம் = வரி. கட்டாயம் = வரி செலுத்துதற்போற் கண்டிப்பு**

**சிங்கியடித்தல்**

**சிங்கி = தாளம். அடித்தல் = தட்டுதல். சிங்கியடித்தல் = இரப்போன் தாளம் தட்டி இரப்பதுபோல் திண்டாடுதல்.**

**தாளக்கருவியை உருவக(ரூபக) தாளத்தில் தட்டினால் சிங்சீயான் என்ற ஒலியெழும். இதனால், தாளக்கருவிக்குச் சிங்கியென்றும் சீயான் என்றும் இருபெயருண்டு**

– ஞா. தேவநேயப் பாவாணர் (மொழியாராய்ச்சிக் கட்டுரைகள்)

# இந்தச் சொல்லுக்கு ஏன் இந்தப் பொருள் ?
# (வேர்ச்சொல் துணுக்கு விளக்கம்)

சென்ற இதழின் தொடர்ச்சி...




**இரா. திருமாவளவன்**

தேசியத் தலைவர், மலேசியத் தமிழ்நெறிக் கழகம்,
மலேசியா


101. **அது** > உடமைப் பொருள் வேற்றுமை உருபு. ஒருமையைக் குறித்தது. உல்> சேர்தல் பொருள் வேர். உல்> அல்>அது. அவனது புத்தகம்.

102. **கள்** > பன்மைப் பொருள் சாரியை. உல்> சேர்தல், கூடல் கருத்து தரும் வேர். உல்>குல்>குள்>கள் = பன்மை விகுதி. சேர்ந்தன; அதிகரிக்கும். ஒன்றுக்கும் மேற்பட்டுக் கூடுவன. படங்கள், வீடுகள் .

103. **கணம்** > கூட்டத் தொகுதி. உல்> சேர்தல் கருத்து வேர். உல்>குல்>குள்>கள்>கண்>கணம். சிவகணம். தூக்கணங் குருவி. தொங்கும் வகையில் தொகுதியாகக் கூடு கட்டும் குருவி.

104. **கணக்கு** > எண்களைக் கூட்டியும் பெருக்கியும் செய்யும் எண்ணியம். உல்>குல்= சேர்தல், கூட்டல் கருத்து. உல்>குல்>கல்>கள்>கண்>கணம்>கணக்கு.

105. **கடம்** > உள் குடைவாக உள்ள குடம் போன்ற தாளக் கருவி. உல்> துளைத்தல் கருத்து வேர். உல்>குல்>குள்> கள்>கடு>கடம். உள் குடைந்து துளைத்த குடம்.

106. **குடம்**> உள் குடைவாக உள்ள மட்பானை. உல்> துளைத்தல் கருத்து வேர். உல்>குல்>குள்>குடு>குடம். ( உல்>குள்>குடு>குடுவை)

107. **மாத்திரை** > கால அளவு. உல்> பொருந்துதல் கருத்து வேர். உல்>முல்> முத்து. பொருந்துதல். முத்து> மத்து= பொருந்தி, தேய்த்துக் கடையும் கோல். உல்>மல்> மால்>மாத்தல்= பொருத்தி ஒப்பிட்டு அளத்தல். பொருத்தமுற மதிப்பிடல். மால்>மா> மாத்திரை = காலத்தை பொருத்தமுற மதிப்பிடல்.

108. **மதி** > காலத்தை அளக்கப் பயன்படும் துணைக்கோள். உல்>முல்>மல்> மதி

109. **நெருப்பு**> தேய்த்தலால் உருவான தீ. உல்> சேர்தல், தேய்த்தல், துளைத்தல் கருத்து வேர். சேர்வது தேயும்; தேய்வது சூடேறும்; சூடேறியது எரியும். உல் > சேர்தல் கருத்து வேர். உல்>நுல்>நுர்= ஒளி. நுல்> நெல் = ஒளி. உல்>நுல்>நெல்>நெர்>நெருப்பு.

110. **கலம்**> உட்குடையப்பட்ட ஏனம். உல்= துளைத்தல் கருத்து வேர். உல்>குல்>கல்> கலம்.

111. **பட்டயம்**> தட்டி பட்டையாக்கப் பெற்ற ஆவணம். உல்= பொருத்தல், மோதல் கருத்து வேர். உல்> புல்> புள்> பள்> பட்டு > பட்டை >> ஓங்கிப் பட்டென அடித்தலால் பட்டையானது. பட்டையான தகட்டில் எழுதப்பெற்ற உரிமை ஆவணம்.

112. **பட்டா** > நிலப்பட்டா. பட்டையத்தில் எழுதப்பெற்ற நில உரிமை ஆவணம். ( grand)

113. **தட்டை**> தட்டப்பெற்றுப் பட்டையாக்கப் பெற்ற ஏனம். உல்> துல்> துள்> தள்> தட்டு. தட்டு> தட்டை. ( உல்= பொருந்தல், மோதல் கருத்து வேர்)

114. **துணி**> துணிக்கப் பெற்ற பஞ்சு நெயவு. உல்= துளைத்தல் கருத்து வேர். துளைத்தலால் பொருள்கள் சிதைந்து பிரியும். உல்> தும்> துண்> துணி.

115. துண்டு > வெட்டப்பட்ட தனிப்பகுதி. உல்> துல்>தும்> துண்> துண்டு. துண்டுத் துணி (towel) இறைச்சித் துண்டு. துண்டு + அம் = துண்டம். இறைச்சித் துண்டம்.

116. கிளி > உணவைக் கிள்ளுவது போல் கொத்தித் தின்னும் பறவை. உல்> குல்= குத்தல் கருத்து வேர். உல்>குல்>குள்>கிள்> கிளி.

117. கிள்ளை = கிளி. உல்>குல்>குள்>கிள் >கிள்ளை

118. புழு> ஓட்டைப் போட்டுச் சென்று உணவுண்ணும் உயிரி. உல்> புல்= துளைத்தல் கருத்து வேர். உல்>புல்>புழு

119. பல்> உணவைக் கூர்மையால் வெட்டி சிதைக்கும் வாயுறுப்பு. உல்> புல்= கூர்மை, குத்துதல், துளைத்தல் கருத்து வேர். உல்>புல்>பல்.

120. பலா> பருத்த பழம். பெரிதாய் இருப்பதால் இப்பெயர் பெற்றது. உல்= திரட்சி பொருள் வேர். உல் > புல்> பல்> பல. பல்> பலா . பல்> பர்> பருமை.

121. சில்லி = சிறிய கற்கள், சிறுத்த பொருள், சில்லி மூக்கு. உல்> துளைத்தல் பொருள் வேர். துளைக்கப்படுவது சிதைந்து சிறுக்கும். உல்>இல்> சில் = சிறுமைப் பொருள் அடி. சில்> சில்லி

122. சிறுமை > அளவில் குறுகிய வடிவு, குறுகிய பண்பு. உல்>இல்>சில்>சிறு> சிறுமை

123. சிட்டு> சிறிய பறவை, சிறியது. உல்>இல்>சில்> சிள்>சிட்டு.

124. சிட்டை = சிறிதாய்த் துண்டு செயப்பெற்ற தாள். உல்> இல்> சில்> சிள்> சிட்டு> சிட்டை

125. சீட்டு = சிறியதாய் நறுக்கப் பெற்ற தாள் துண்டு. உல்> இல்> சில்> சிள் > சிட்டு > சீட்டு

126. அல்லி = இரவில் பூக்கும் மலர். உல் > அல் = கருமைப் பொருள் வேர். அல்= கருமையான இரவு. அல்லி = இரவில் பூக்கும் மலர்.

127. பிணி > தொற்றும் நோய். உல் > சேர்தல் கருத்து வேர். உல்>புல்> புள்> பிள்> பிண்>பிணி.

128. நோய்> உடலை நலியச் செய்யும் நோவு. உல்= துளைத்தல் கருத்து வேர். துளைக்கப்பட்ட பொருள் மெலியும்; நலியும்; சிதையும். உல்>நுல்>நொல்> நொலி>நலி. உல்>நுல்>நொல்>நொய்>நோய்.

129. நஞ்சு> உயிரை நலியச் செய்து சிதைக்கும் பொருள். உல்> துளைத்தல் கருத்துவேர். உல்>நுல்> நல்>நய்> நைந்து. நல்> நய்>நய்ந்து> நய்ஞ்சு> நஞ்சு

130. பாசை> கரப்பான் பூச்சி. பசை போல் ஒட்டி அரிக்கும் பூச்சி. உல்= பொருந்துதல், சேர்தல், ஒட்டுதல் கருத்து வேர். உல்> புல்>பல்>பய்>பயை> பசை>பாசை

131. கரப்பான்> கரிய இருட்டில் மறைந்து வாழும் பூச்சி. உல்> குல்>கல்= கருமைப் பொருள் வேர். கல்> கர்>கரு. கல்> கர்>கரப்பு> கரப்பான்.

132. கரா> நீரில் மறைந்து வாழும் முதலை. உல்> குல்>கல்>கர்>கரா. ( croc)

133. முதலை > தலையை நீட்டி முந்தித் தள்ளிக்கொண்டிருக்கும் ஊருயிரி ( ஊரி). உல் = முற்படுதல் கருத்து வேர். உல்> முல்> முது> முதல்> முதலை.

134. எருமை > கரிய நிறமுடைய மா. உல்> இல்> இரு>இருமை> எருமை.

135. விரல்>> விரிக்கப்படுவதால் விரலாயிற்று. உல் = சேர்தல் கருத்து வேர். சேர்வது பருக்கும்; பருத்தது புடைக்கும் அல்லது பரவும்; பரவியது விரிந்ததாகும். விரலைப் பரப்பி விரித்தலால் விரலாயிற்று. உல்> புல்> பில்>வில்>விரி > விரல் ( வில்> விர் > விரி>> விரல்)

136. சரக்கு>> காய்ந்த, உலர்ந்த பொருள். பண்டைநாளில் உண்பதற்கேற்றவாறு கறிப்பொருள்களை உலர வைத்தே விற்பனையாக்குவர். உல் > சுல்= குத்தல் வெப்பப் பொருள் வேர். சுல்>சுர்>சர்>சர>சரகு>சரக்கு.

137. சரி> ஒன்றன் நிகராய் ஒப்புமைப் பெற்றது. அதனால் பொருந்தல் கருத்து உருவாகி மெய்யாயிற்று. உல்> பொருந்தல் கருத்து வேர். உல்>உம்>அம்>அமம்> சமம். பொருந்தியது தொடராகும். தொடர்ச்சி ஒழுங்கமைந்தது; முறையானதாயிற்று. உல்>சுல்> சுர்>சர்> சரம். சுல்>சுர்>சர்> சரி.

138. சமம்> பொருந்தியது, ஒப்புமையானது. உல்>உம்>அம்> அம்முதல்= பொருந்துதல். அம்> அமம்> சமம்= ஒப்பானது.

139. ஒப்பு = பொருந்தியது. உல்= பொருந்தல் கருத்து வேர். உல்>ஒல்> ஒல்லல்= பொருந்தல். ஒல்லும் வகை= பொருந்தும் வகை. உல்>ஒல்> ஒம்> ஒம்பல் = பொருந்தல். ஒம்பு> ஒப்பு . ஒப்புதல் = பொருந்துதல்.

140. ஒவ்வு>ஒவ்வல்= பொருந்தல், பொருந்துவதால் ஏற்றல். உல்= பொருந்தல் கருத்து வேர். உல்> ஒல்> ஒம்>ஒம்பு> ஒப்பு> ஒவ்வு. ஒவ்வாமை= பொருந்தாமை.

141. அழல்>தீ. குத்தி எரிக்கும் நெருப்பு. உல்=குத்தல் பொருள் வேர். உல்>உள்>அள்>அழ்>அழல்.

142. அழற்சி > அழல் ( தீ) போல் துன்புறுத்தும் நோவு, சீற்றம், பொறாமை. உல்>அள்>அழல்> அழற்சி.

143. அழுக்காறு > மனத்தில் அழல் போல் நாளும் குத்திக்கொண்டிருக்கும் எரிச்சல் உணர்வு. உல்> குத்தல் கருத்து வேர். உல்>உள்>அள்>அழ்> அழல் = எரிவு. அழ்> அழு> அழுங்கல்= மன எரிவு. அழ்> அழுங்கு>அழுக்கு> அழுக்காறு = தாங்கொணா மன எரிவு, பொறாமை.

144. இன்னல்> குத்துதல் போல் நிகழும் துன்பம். உல்= துளைத்தல் கருத்து வேர்; உல்> இல்= துளைத்தலால் ஏற்படும் சந்து, துளை, குடைவு. உல்>இல்> இல்லு> இன்னு>இன்னல்= துளைத்தெடுக்குந் துன்பம்.

145. இல்லி = துளை. உல்= துளைத்தல் கருத்து வேர். உல்>இல்>இல்லி = துளைத்தலால் ஏற்படும் ஓட்டை. இல்லிக்குடம்= ஓட்டைக் குடம்.

146. இல்லம்> துளைத்தலால், உட்குடைவால் ஏற்படும் வெற்றிடமே தங்குதற்குரியதாகையால் வீடு எனப் பொருளாயிற்று. உல்= துளைத்தல் கருத்து வேர். பண்டைநாளில் குடைவாய் உள்ள குகையே இல்லாமாய் இருந்தது. உல்> இல்> இல்லம்.

147. இன்மை > குடைவாய் உள்ள இடம் வெற்றிடமாகையால் வெறுமைப் பொருள் ஆகியது. உல்= துளைத்தல் கருத்து வேர். உல்> இல்= துளைத்தலால் நிகழும் வெறுமை. உல்>இல்> இல்லை = ஒன்றுமற்ற வெறுமை. உல்>இல் >இன்மை= இல்லாத் தன்மை.

148. இருப்பு> இல்லாத வெற்றிடம் பொருள் நிரப்ப ஏதுவாகும். எனவே இல் தன்மை இருத்தலுக்கு ஏதுவாயிற்று. உல்> இல்>இர்> இரு> இருப்பு. இருத்தலால் இருக்கும் பொருளுக்கும் ஆகியது. பொருளிருப்பு, செல்வம், உள்ளிருப்பு.

149. இருக்கை> ஓர் இடத்தில் இருத்தல், அமரல், அமரும் இடம். (இன்மையே இருத்தலுக்கு மூலம். ) உல் >இல்>இரு>இருக்கை.

150. இன்னும்> இருத்தல் கூடுதலால் மேலும் என்னும் பொருளாகியது.,இன் + உம் = இன்னும். இருக்குந் தன்மை மேலும் மேலும் கூடுகை. உல்> இல்>இன்>இன்னும்.

தொடரும்...

# மஸ்து!



முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி

"மஸ்து மஸ்து – இது
மதுரகார மஸ்து
கொஸ்து கொஸ்து – இது
கத்திரிக்கா கொஸ்து"
(வாலி, திருமூர்த்தி).
****

pneumonoultramicroscopicsilicovolcanoconiosis – மிக நீளமான ஆங்கிலச் சொல்.
இதுஒரு வகை நுரையீரல் நோயைக் குறிப்பது.
இதை ஒரே சொல்லாக மருத்துவ உலகம் குறிப்பிட்டாலும்
pneumono ultra microscopic silico volcano coniosis என ஆறாகப் பிரித்தே பொருள் காண முடியும்.
(45 எழுத்துகள்).

அடுத்ததாகச் சேக்சுபியர் பயன்படுத்திய நீளமான சொல் (27 எழுத்துகள்):
"O, they have lived long on the alms-basket of words, I marvel thy master hath not eaten thee for a word; for thou art not so long by the head as honorificabilitudinitatibus: thou art easier swallowed than a flap-dragon."
(Loves Labour Last: V, 1).
honorificabilitudinitatibus (med. Latin) = the state of being able to achieve honours.

தமிழில் ஒரு சொல்லில் ஐந்து, ஆறு எழுத்துகளே அதிகம்!
காப்பியன், வள்ளுவன், மருத்துவன்...
நீளமாக இருந்தால் ஓரிரு சொற்களின் கூட்டாக இருக்கும்.
சிலப்பதிகாரம் = சிலம்பு + அதிகாரம்.
ஆகவே, போலிக்கு இலக்கண வரையறை கூறி வகைசெய்யும் போது மூன்றெழுத்துச் சொற்களைக்கொண்டு முதற்போலி, இடைப்போலி, கடைப்போலி, முற்றுப்போலி என்று எளிமையாகக் கூறிவிடுகின்றனர்.

போலி = ஒரு சொல்லில் ஓரெழுத்துக்கு மாற்றாக ஏறத்தாழ ஒலி ஒப்புமையுடைய வேறோர் எழுத்து வருவது; ஆனால், பொருள் மாறாது.

முதற் போலி: மஞ்சு – மைஞ்சு,
நாண் – ஞாண்.
இடைப் போலி: அரசு – அரைசு,
நெயவு – நெசவு.
கடைப் போலி: குடல் – குடல்,
சாம்பல் – சாம்பர், பந்தல் – பந்தர்.

மூன்று எழுத்துகளும் போலியாக வருவது முற்றுப்போலி எனப்படும்.
எடுத்துக்காட்டாக: ஐந்து – அஞ்சு.

[அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை!
வங்கியில் ஆக் கடன் (பசு மாட்டுக் கடன்) வாங்கிய ஒருவர் கடனைத் திருப்பிக் கட்டவே இல்லை. மேலாளர் கேட்கும்போதெல்லாம்,
"அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை!,
அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை!"

என்றே விடை கூறினார்.
ஒன்றும் புரிந்துகொள்ள முடியாத மேலாளர்
ஒருநாள், அது என்ன, அஞ்சுக்கு இரண்டு புதிர்?
சற்றே விளக்கமாகச் சொல்லுங்கள்" என்றார்.
அவர் சொன்னார்: ஓர் ஆன் "பால், தயிர், நெய்,
சாணம், சிறுநீர் (கோமியம்) தரும். ஐந்தும் தந்தால்
தான் நான் கடனை அடைக்க முடியும்.
நான் வாங்கியது கடைசி இரண்டு மட்டும்
பழுதில்லாமல் தருகிறது!
நான் எப்படிக் கடனை அடைக்க முடியும்?
அதுதான் 'அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை! "]

"அஞ்சிலே ஒன்று பெற்றான்; அஞ்சிலே
ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றா றாக ஆரியர்க்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கு கண்டு
அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றைவைத்தான்; அவன் எம்மை
அளித்துக் காப்பான்" (கம்பன்).
1. காற்று 2. கடல் 3. வான் 4. மண் 5. தீ.

மைந்து = வலிமை.
"தும்பை தானே நெய்தலது புறனே
மைந்துபொரு ளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை அழிக்குஞ் சிறப்பிற் றென்ப."
(தொல்காப்பியம், பொருளதிகாரம்: 70).

மைந்தன் = மகன்
"குலக்கோ மைந்தர் தமக்கும்"
(கம்பரா. மந்தரை சூழ்ச்சிப் படலம்: 76).

"கஞ்சத்துக் களிக்கும் இன் தேன் கவர்ந்து
உணும் வண்டு போல,
அம் சொற்கள் கிள்ளைக்கு எல்லாம் அருளினாள்
அழகை மாந்தி,
தம் சொற்கள் குழறித், தம் தம்
தகை தடு மாறி நின்றார் –
மஞ்சர்க்கும், மாத ரார்க்கும்,
மனம் என்பது ஒன்றே அன்றோ?"
(கம்பராமாயணம், கோலம்காண் படலம்: 19).

மஞ்சர் = மைந்தர், முற்றுப் போலி.
சீதையின் அழகெலாம் ஒருங்கே கண்டால்
ஆடவர் மட்டுமா மயங்குவர்? மகளிரும்
மயங்குவர்! இருவருக்கும் மனம் என்னும் பொறி
ஒன்று தானே!
(அடடா, கம்பா! சரியான வம்பா!)

இதில் மயங்கிய கண்ணதாசன்:
"கண்ணாடி முன்னால் நில்லாதே – உன்
கண்ணாலும் உன்னைக் காணாதே!
மங்கை உன் அழகை மாதர் கண்டாலும்
மயங்கிடுவார் கொஞ்ச நேரம்! – இந்த
மானிடர் உலகில் வாழ்கிற வரைக்கும்
தனியே வருவது பாவம்"

மைந்து விரட்டு = மஞ்சு விரட்டு!
(வலிமையை எண்பிக்கும் மாடுபிடி திருவிழா).
ஐ = வலிமை, வலிமை மிக்க தலைவன்.
"என் ஐ முன் நில்லன்மின் தெவ்விர் பலர் என் ஐ
முன்நின்று கல்நின் றவர்."
(திருக்குறள்: 771).
பொருள்: பகைவரே! என்னுடைய தலைவர் முன்
எதிர்த்து நிற்காதீர்கள், என்னுடைய தலைவர்
முன் எதிர்த்து நின்று (நடு)கல்வடிவாய் நின்றவர்
பலர்.
தலைவனைக் குறிப்பதால் ஐ என்பதற்கு வலிமை
எனப் பொருள் கொள்ளலாம்!

ஐ – மை – மைது – மைந்து – மைத்து – மத்து –
மஸ்து – மதம்!
'கட்டுமஸ்தான உடம்பு' – பேச்சு வழக்கு.
வேட்டி – வேஷ்டி, முட்டி –முஷ்டி,
குத்துச்சண்டை – குஸ்திச் சண்டை ஆனது
போல மத்து – மஸ்து ஆகி இப்போது தெலுங்கில்
பயன்படுகிறது..

மைந்து – மத்து – மதம் = வலிமை!
"முத்தக நிறைந்தமுளை எயிற்றுமத யானை
மத்தகமுந் திருமகள்தன் வடிவுபட மாதோ
ஒத்தகலம் எண்முழமென் றோதிநக ரிழைத்தார்

மொய்தெரிசெம் பொற்றுகளி னூன்முடிவு
கண்டார்."
(சீவகசிந்தாமணி: 2485).

பொருள் : இருபுறத்தும் மதயானைகளை நிற்ப இடையே திருமகளுருவம் அமையக் கோலஞ் செய்தார்.
மதம்பிடித்தல் = வலிமை மிக்குத் திமிர்தல்.

மதம் – மதன் (அறம் – அறன், போலக் கடைப்போலி) = வலிமை.

"மன்னெயில் கதுவு மதனுடை நோன்தாள்
மாத் தானை மற மொய்ம்பின்
செங்கண்ணாற் செயிர்த்துநோக்கி"
(பட்டினப்பாலை: 278–279).

மதன், நோன் = வலிமை.

"மதனுடை முழவுத்தோள் ஓச்சித், தண்ணென
வீசி யோயே; வியலிடம் கமழ,
இவன்இசை உடையோர்க்கு அல்லது, அவணது
உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்:
வலம்படு குருசில்! நீ ஈங்குஇது செயலே?"
(புறநானூறு: 50).

மதனுடை முழவுத் தோள் = வலிமையுடைய முழவு போன்ற தோள்கள்.

மதன் – மன்மதன்,
(நிலையான வலிமையுடையான்).

மதம் – மத்தம்,
"மத்தக் கரியுரி யோன்தில்லை
யூரன் வரவெனலும்
தத்தைக் கிளவி முகத்தா
மரைத்தழல் வேல்மிளிர்ந்து
முத்தம் பயக்கும் கழுநீர்
விருந்தொடென் னாதமுன்னம்
இந்தக் கருங்குவ ளைச்செவ்வி
யோடிக் கெழுமினவே"
(திருக்கோவையார்: 388).

மத்தக் கரி உரியோன் = மத யானையின் தோலை அணிந்த சிவபெருமான்.
உரி = (உரிக்கப்பட்ட) தோல்.

மத்தம் – உன்மத்தம் = அதிக மதமான வெறி.
"கன்னத்தில் முத்தமிட்டால், உள்ளம்தான்
கள்வெறி கொள்ளுதடி!
உன்னைத் தழுவிடிலோ, கண்ணம்மா
உன்மத்தம் ஆகுதடி!"
(பாரதியார்).

உன்மத்தம் > ஊமத்தம் (ஊமத்தன், ஊமத்தை).
இந்த ஊமத்தன் இலைகொண்டு செய்யப்படும் எண்ணெய் 'மத்தன் தைலம்'.
இலைச்சாறு, தேங்காய் எண்ணெய், மயில் துத்தம் (copper sulphate) சேர்த்துச் செய்யப்படும் மத்தன் தைலம் புண், புரைகளை நீக்கும். நீரிழிவு நோயில் ஏற்படும் ஆறாப் புண்களைக் குணப்படுத்தும்.

நாய்க்கடியால் ஏற்பட்ட புண்ணுக்கு ஊமத்தையிலிருந்து சிறந்த மருந்து ஆக்கப்படுகிறது.

கடைப்போலியைப் பயன்படுத்தினால்,
மைந்து – மைத்து – > might – mighty!

might (n.)
"quality of being able, ability to do or act, power," Middle English might, from Old English miht, earlier mæht "bodily strength, power; authority, dominion, control; ability," from Proto-Germanic *makhti– (source also of Old Norse mattr, Old Frisian, Middle Dutch, Dutch macht, Old High German maht, German Macht, Gothic mahts), a Germanic suffixed form of the PIE root *magh– "to be able, have power."



# கண்மாறல் : ஒருசொல் – கருத்தாய்வு


பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,

அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.


மொழியாலான கவின்நுண்கலைப் படைப்பான இலக்கியம் சொல்லாட்சியில் புதுமை/நுட்பங்களை ஆள்கின்றது. மரபுத்தொடர் போன்ற சிறப்புச் சொற்களைத் திறமையாகக் கையாண்டும் புதிதாகப் படைத்தும் மாற்றியும் பொருள் நுட்பத்தை வாய்ப்பாக்குகின்றது. இதை உரை விளக்கித் தெளிவுறுத்துகின்றது.

மலர்காணின் மையாத்தி நெஞ்சே! இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று ( குறள் 1112 )

என்னும் குறட்பா உரையில் பரிமேலழகர், "மையாத்தல்: ஈண்டு ஒவ்வாதவற்றை ஒக்கும் எனக் கோடல்; இறுமாத்தல் செம்மாத்தல் என்பன போல ஒரு சொல்" என்று விளக்கியுள்ளார். இதனால் வடிவ நிலையில் இரண்டு சொற்களின் கூட்டாகத் தோன்றுகின்ற சில சொற்கள், பொருள் நிலையில் ஒரு சொல்லாக இயல்வதை அறியலாம் . இவ்வாறே,

திருவொக்கும் தீதில் ஒழுக்கம்; பெரிய
அறனொக்கும் ஆற்றின் ஒழுகல்; பிறனைக்
கொலையொக்கும் கொண்டுகண் மாறல்; புலையொக்கும்
போற்றாதார் முன்னர்ச் செலவு

( நான்மணிக்கடிகை )

என்னும் அடியிலும் கண்மாறல் என்னும் சொல் கைவிரித்தல் / ஏமாற்றுதல் என்னும் கருத்தில் ஒரு சொல்லாகப் பயில்கின்றது. இத்தகைய சிறப்புப் பயன்பாட்டை அறிந்தால் செய்யுள் சொல்லுக்கு முறையாகக் கருத்துணரலாம்.

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகக் கூட்டம்







"தனிமைச் சுவையுடைய சொல்லை – எங்கள்
தமிழினினும் வேறெங்கும் யாம் கண்டதில்லை!"
– பாவேந்தர் பாரதிதாசன்

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 175–178ஆவது கூட்டங்கள் முறையே 2025 பிப்பிரவரி 17,24, மார்ச்சு 07, 11ஆம் நாள்களில் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது. மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

இதனால் தமிழியல் ஆய்வாளர்கள், அயல்நாட்டு அறிஞர்கள், கல்வித்துறையினர், பொதுமக்கள், ஆய்வு மாணவர்கள், அரசுப் பணியாளர்கள் ஆகியோர் பயன்பெற்றுவருகின்றனர்.

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகக் கூட்டம்




இக்கூட்டங்களில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், 'அறிவியல் ஒளி' இதழின் ஆசிரியர் திரு. நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், முனைவர் ஆ. அரிமாப்பாமகன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இந்நான்கு கூட்டங்களிலும் மொத்தம் 621 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:**

| | |
|---|---|
| Call money | – கைமாற்றுப்பணம் |
| Bullion market | – பொன்னங்காடி |
| Data breach | – தரவுக்களவு |
| Colour fastness | – நிற நிலைப்பு |
| Woven wonder | – வியனாடை |
| AI washing | – செயற்கை நுண்ணறிவு ஏய்ப்பு |
| Agesplaining | – மூப்பு விளக்கம் |
| Doom spending | – மனவழுத்தச் செலவு |
| Accomplishment award | – வினைமுடிப்பு விருது |
| Cryptic clue | – குறிப்புமொழி |
| Appliance garage | – அடுகலப் பேழை |
| Bagel | – இன்வடை |
| Baguette | – இன்குழல் |

செம்மொழித் தமிழ் காப்போம்! செந்தமிழால் பேசுவோம் !



தமிழ்நாடு அரசு

தமிழ்வளர்ச்சித் துறை

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்




எண்.75, முதல் தளம், நகர் நிருவாக அலுவலக வளாகம்
சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்
சென்னை–600 028.


Sorkuvai.tn.gov.in

044–22541209



# அகரமுதலித் தொகுதிகள்

## 35% கழிவு விலையில் நூல் விற்பனை

| தொ. எண். | நூல் பெயர் | விலை ரூ. | கழிவு (35%) ரூ. | விற்பனை விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | இரண்டாம் மடலம் 'கா–கௌ' முதல் எட்டாம் மடலம் 'வெ–வெள' வரை ( 17 தொகுதிகள் ) | 6000/– | 2100/– | 3900/– |
| 2. | ஒன்பதாம் மடலம் இணைப்பு மடலம் (இரண்டு தொகுதிகள்) | 800/– | 280/– | 520/– |
| 3. | பத்தாம் மடலம் அயற்சொல் மடலம் (மூன்று தொகுதிகள்) | 1200/– | 420/– | 780/– |
| 4. | பதினொன்றாம் மடலம் (தமிழ் அகரமுதலி வரலாறு) | 300/– | 105/– | 195/– |
| 5. | பன்னிரண்டாம் மடலம் (தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்) | 400/– | 140/– | 260/ |
| 6. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/– | 350/– | 650/– |
| 7. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/– | 175/– | 325/– |

**புதிய வெளியீடு**

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**

**திருந்திய பதிப்பு 7 தொகுதிகள்**

**விரைவில் விற்பனைக்கு முன் பதிவு செய்யப்படுகிறது.**

குறிப்பு : தொகையை மொத்தமாக அல்லது வங்கி வரைவோலையாக / காசோலையாக "The Director, Directorate of Tamil Etymological Dictionary Project, Chennai – 600 028" எனும் பெயரில் சென்னையில் மாற்றத்தக்க (Payable at Chennai) வகையில் வழங்கலாம் அல்லது மின்னனு முறையில் வழங்கலாம் (through ECS Payment).

IFSC Code : IDIB000K204 Micr Code : 600019175

Account No. 759144235 (Indian Bank, Indira Nagar Branch, Chennai – 20.)